REGD. No. TN-MS (C) 244 ❋ ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 420212 4 பக்கம் விலை 40 காசு



**உழைப்பு**

உழைப்பு உடலும், உள்ளமும் முறிந்து போகாத அளவிலேயும், வகையிலேயும் இருக்க வேண்டும். வாழ்விற்கு வகை தேடுவதற்காகப் பாடுபட வேண்டும்.

— பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

**வேறுபாடு**

எவ்வளவு கருத்து வேறுபாடு இருந்தாலும் மனிதன், மனிதத் தன்மையோடு நடந்து கொள்ள வேண்டும் என்பது முக்கியம்.

— தந்தை பெரியார்



● மலர் 5 சென்னை 5—10—1981 திங்கள் வெளியூர் 6—10—1981 செவ்வாய் இதழ் 344 ●

# ஒருமாதம் கருணாநிதி ஊர் சுற்றியது ஏன்? ப. உ. ச. கேள்வி

**சென்னை. அக். 5— மறியல் போராட்ட அறிவிப்புக்கு முன் ஒரு மாத காலம் கருணாநிதி ஊர் ஊராகச் சுற்றிய மர்மம் என்ன என்று கழகப் பொதுச்செயலாளர் ப. உ. ச. கேட்டார்.**

சென்னை பாடியில் கழக மகளிர் அணி நடத்திய பொதுக் கூட்டத்திற்கு ரமணி தலைமை வகித்தார்.

கூட்டத்தில் கழக பொதுச் செயலாளர் ப. உ. ச., வீட்டு வசதி வாரியத் தலைவர் வேலூர் நாராயணன், திருவை அண்ணாமலை, பா. வளர்மதி, ஜே. சி. டி. பிரபாகரன் எம் எல் ஏ கஸ்தூரிபாலன் ஆர். எஸ். மணி, விஜயன், ஆண்டாள் ரவூத், இளங்கோவன் ஆகியோர் பேசினர்.

கழக பொதுச் செயலாளர் ப. உ. ச. பேசுகையில் கூறியதாவது:-

## ஏழைகள் பற்றி சிந்திப்பவரா?

இலங்கையில் கொலை செய்யப்பட்ட தனபதியைப் பற்றியோ, சிங்கள வெறியர்களின் தாக்குதலுக்கு ஆளான தாய்க்குலம் பற்றியோ, ஏழை எளியவர்களைப்பற்றியோ கருணாநிதி நினைத்து பார்ப்பவரானால் இன்று ஆடும் சதை 74-ல் ஆடியிருக்க வேண்டும். அப்போது ஆடவில்லையே!

முதல் உலகத்தமிழ் மாநாடு இலங்கையில் நடைபெற்றது. முதலமைச்சராக இருந்த பக்தவத்சலம் கலந்து கொண்டார். அண்ணா மாநாடு சிறப்பாக நடைபெற வாழ்த்துச் செய்தி அனுப்பியிருந்தார்.

2-வது உலகத் தமிழ் மாநாட்டை அண்ணா நடத்தினார். 3வது உலகத்தமிழ் மாநாடு பாரீசில் நடந்தது. முதலில் மதியழகனை அனுப்பி வைத்தார் கருணாநிதி. பிறகு கருணாநிதியே போய் பேசிவிட்டு வந்தார்.

4வது உலகத் தமிழ் மாநாடு இலங்கையில் நடந்தது. மாநாட்டிற்கு வந்த தமிழர்கள் சுட்டுக்கொல்லப்



பட்டனர். விலை மதிக்கப் படாத நூல் நிலையம் தீக்கிரையாக்கப்பட்டது.

## நாடே கண்டித்தது

நான் இலங்கை சென்றிருந்தபோது பார்த்தேன். 11 கல் நட்டு வைத்திருக்கிறார்கள் திருமணமாகாத இளைஞர்கள் மரணமடைந்ததன் நினைவாகக் நாடே அந்த கொடுமையை கண்டித்தது.

அன்றைய தினம் போடி தொகுதி சட்டமன்ற உறுப்பினராக இருந்த சுருளிவேலு சட்டமன்றத்தில் ஒரு ஒத்தி வைப்புத் தீர்மானத்தைக் கொடுத்தார்.

கருணாநிதி அதை திரும்பப் பெறவேண்டும் என்று சுருளிவேலுவுக்கு சொல்லி அனுப்பினார்.

அதற்கு சுருளிவேலு, 'இது அயல்நாட்டுப் பிரச்னை என்றாலும் மத்திய அரசின் கவனத்தை கவர்ந்திழுக்க இதைக் கொண்டுவந்திருக்கிறேன். வாபஸ் பெற முடியாது' என்று சொல்லி அனுப்பிவிட்டார்.

கருணாநிதியின் அரசிதழ் பதிவு நேர்முக உதவியாளராக இருந்த கருப்பணனை அனுப்பினார். 'என்ன உலகத் தமிழ் மாநாடு நம் தலைவருக்கு ஒரு அழைப்பு கூட அனுப்பவில்லை. இந்த தீர்மானத்தை கொண்டு வந்தால் இந்திய அரசு கோபித்துக் கொள்ளும், என்று சொல்லசொன்னார். பின்னர் சுருளிவேலு திரும்பப் பெற்றுக்கொண்டார்.

## ரத்தம் காயுமுன்பே

அன்றைய தினம் ஒத்தி வைப்பு தீர்மானம் கொண்டு வராததன் காரணம் கருணாநிதிக்கு அழைப்பு அனுப்பவில்லை; அடுத்தது இந்திய அரசு கோபித்துக் கொள்ளும்.

ஆனால் இன்றைக்கு முதலவர் புரட்சித் தலைவரே ஒரு தீர்மானம் கொண்டு வந்தார்.

அன்றைக்கு அவ்வளவு படுகொலை செய்து விட்டு ரத்தம் காய்வதற்கு முன்பு இலங்கை பிரதமராக இருந்த பண்டாரநாயகா டெல்லி செல்லும் வழியில் தமிழகத்திற்கு வந்தபோது முதல்வராக இருந்த கருணாநிதி மாலை போட்டு வரவேற்றார்.

நாங்களெல்லாம் விமான நிலையத்துக்குப் போக வேண்டாம் என்ற போது டெல்லி கோபித்துக்கொள்ளும் என்று சொல்லிபோய் மாலை போட்டார்.

அப்போது ஆடாத சதை, இப்போது ஆடுகிறதா?

புறநானூறு தெரியுமா என்று கேட்கிறார். முதலில் அது எங்கிருந்து வந்தது என்று கற்றுக் கொண்டு வந்து பேசுங்கள்.

நமக்கெல்லாம் தமிழை கற்றுத்தந்தது அண்ணாவே தவிர கருணாநிதியல்ல.

(2-ம் பக்கம் பார்க்க)



உடல் ஊனமுற்றோர் நல்வாழ்வுத் திட்டங்களுக்காக மாவட்ட நலநிதியிலிருந்து பெறப்பட்ட 10 ஆயிரம் ரூபாய்க்கான காசோலையை முதல்வர் புரட்சித்தலைவர் திருச்சி மாவட்ட கலெக்டர் சாந்தா ஷீலா நாயரிடம் வழங்கினார்.

டாக்டர் பட்டத்துக்கு மாணவர் ஆய்வு:

# சமுதாய மாற்றத்தில் 'தாய்' ஏட்டின் பங்கு

சிதம்பரம் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் என். ஜனார்த்தனன் எம். ஏ. சமூகவியலில் இறுதியாண்டு மாணவராவார்.

இவர், தத்துவவியலில், டாக்டர் பட்டத்திற்கான ஆராய்ச்சி நடத்த உள்ளார்.

''சமுதாய மாற்றத்தில் 'தாய்' வார ஏட்டின் பங்கு'' என்ற பொருளில் ஜனார்த்தனன் ஆராய்ச்சி நடத்த உள்ளார்.

இந்தத் தகவலை ஜனார்த்தனன் தெரிவித்துள்ளார்.

★ புதிய தொழில்களுக்கு வட்டியில்லாத விற்பனை வரிக் கடன் உயர்த்தப்படும்

★ விரிவாக்கத் தொழில்களுக்கு வட்டியில்லாத விற்பனை வரிக் கடன் ரூ. 50 லட்சம்

## தமிழகத்தைத் தொழில்மயமாக்க

# மேலும் சலுகைகள்



## புரட்சித்தலைவர் அரசு நடவடிக்கை

### இந்தியாவிலேயே தொழில் வளர்ச்சியில் மூன்றாவது இடம் வகிக்கிறது தமிழகம்

## அமைச்சர் திருநாவுக்கரசு பேட்டி

**சென்னை, அக். 5- தமிழகத்தைத் தொழில் மயமாக்கும் தீவிர நடவடிக்கைகளில் ஒன்றாக புரட்சித்தலைவரின் கட்டளைப்படி தொழில் தொடங்குவோருக்கு மேலும் பல சலுகைகளை கழக அரசு அறிவித்துள்ளது என்று அமைச்சர் திருநாவுக்கரசு கூறினார்.**

**புகளூர் காகித ஆலை அடிக்கல் நாட்டு விழாவுக்கு பிரதமர் இந்திராவை அழைக்க இருப்பதாகவும் தொழில் வளர்ச்சியில் இந்தியாவிலேயே தமிழகம் மூன்றாவது இடம் வகிப்பதாகவும் திருநாவுக்கரசு கூறினார்.**

தமிழக தொழில் அமைச்சர் திருநாவுக்கரசு இன்று நிருபர்களிடம் கூறியதாவது:-

திருச்சி மாவட்டம் கரூர் அருகே உள்ள புகளூரில் ரூ. 180 கோடி செலவில் கரும்புசக்கையில் இருந்து காகிதம் தயாரிக்கும் தொழிற் சாலை அமையப் பட இருக்கிறது.

## பிரதமருக்கு அழைப்பு

இந்த தொழிற்சாலைக்கான அடிக்கல் நாட்டு விழாவுக்கு பிரதமர் இந்திரா காந்தியை அழைக்க இருக்கிறோம்.

இதற்காக டெல்லி சென்று அவரை நேரில் அழைத்தோம்.

மத்திய தொழில் அமைச்சரும் இந்த விழாவில் கலந்து கொள்ளவேண்டும் என்று அழைப்போம்.

இந்தக்காகித ஆலைக்காக 500 ஏக்கர்நிலம் ஆர்ஜிதம் செய்யப்பட்டுள்ளது.

இந்த ஆலைக்குத் தேவையான கரும்புச்சக்கை மோகனூர், டெக்கான், காவேரி, பெரம்பலூர், சக்தி ஆகிய 5 சர்க்கரை ஆலைகளில்இருந்தும் பெறப்படும்.

இந்த ஆலையில் இருந்து ஆண்டு ஒன்றுக்கு 50 ஆயிரம்டன் பத்திரிகை காகிதமும், 40 ஆயிரம் டன் எழுதும் காகிதமும் தயாராகும்.

1984-ம் ஆண்டுசெப்டம்பர் முதல் வாரத்தில் காகித ஆலைஉற்பத்தியைத் தொடங்கும்.

இந்த ஆலைக்கு உலக வங்கி ரூ. 80 கோடியும் ஐ.டி.டி.ஏ. ரூ.61கோடியும் கடன் உதவி அளிக்கிறது.

தமிழக அரசு ரூ 34 கோடி முதலீடு செய்கிறது.

முழுக்க முழுக்க இந்த ஆலை பொது நிறுவனமாக இயங்கும்.

இந்தஆலைக்கான ஆரம்ப பணிகள் நடைபெற்றுக் கொண்டு இருக்கின்றன.

## புரட்சித் தலைவர் கருத்தின்படி

தமிழ்நாட்டில் அதிக அளவில் தொழில்கள் வளர வேண்டும் என்பதற்காக தமிழக அரசு சில புதிய சலுகைகளை வழங்கி இருக்கிறது.

இனிமேல் புதிதாக தொழில்துவங்குபவர்கட்கு வட்டியில்லாத விற்பனை வரிக்கடன் தொகை ஒரு கோடி ரூபாயாக உயர்த்தப்படுகிறது.

இதுவரை ரூ. 48 லட்சம் தான் வழங்கப்பட்டு வந்திருக்கிறது.

பல ஆண்டுகளாக தொழில் அதிபர்களும், சட்டசபையிலும் எடுத்து வைக்கப்பட்ட கோரிக்கைகளை ஏற்று முதல்வர் புரட்சித்தலைவர்

(2-ம் பக்கம் பார்க்க)



# பட்டா பதிவு மூலம் பினாமி நிலங்களை மீட்க நடவடிக்கை

### அமைச்சர் எஸ். டி. எஸ். தகவல்

**சேலம், அக் 5— பட்டா கொடுப்பது மற்றும் பதிவு செய்வதன் மூலம் பினாமி நிலங்கள் பற்றிய தகவல்களை அறிந்து அரசு அவற்றை ஏற்றுக்கொள்ளும் என்று வருவாய்த்துறை அமைச்சர் எஸ். டி. எஸ். தெரிவித்தார்.**

வருவாய்த்துறை அமைச்சர் எஸ். டி. எஸ். நேற்று சேலத்தில் நிருபர்களுக்கு பேட்டி அளித்தார். அப்போது அவர் கூறியதாவது:-

பத்து ஏக்கர் மற்றும் அதற்கு மேற்பட்ட நிலச் சொந்தக்காரர்களிடம் மட்டுமே இதுவரை விவசாய வருமானவரி வசூலிக்கப்பட்டு வந்தது. ஆனால் இந்தத திட்டம் இப்போது மாற்றப்பட்டு உள்ளது. இனி 20 ஏக்கர் நிலம் உள்ளவர்கள் 2 முறை சாகுபடி செய்தால் அதன் மீதான விளைபொருள்கள் அடிப்படையில் விவசாய வருமான வரி வசூலிக்கப்படும்.

• புதிதாக நியமனம் செய்யப்பட விருக்கும் கிராம நிர்வாக அலுவலர்களுக்கு 2 மாத பயிற்சி அளிக்கப்படும். இதற்காக அரசு 11 லட்சம் ரூபாய் செலவு செய்யும்.

தவிர பயிற்சிக்கருவிகள் வாங்குவதற்கும் 3 கோடி ரூபாய் செலவு செய்யப்படும். தமிழகம் முழுவதும் சுமார் 100 பயிற்சி நிலையங்கள் ஏற்படுத்தப்படவிருக்கின்றன.

பட்டாக்களை புதுப்பிப்பது, பிரித்துக்கொடுப்பது ஆகியவை தீவிரமாக நடந்து வருகின்றன. பட்டாக்களை புதிதாக பதிவு செய்வதன் மூலம் இதுவரை சுமார் ஒரு லட்சத்து 51 ஆயிரம் பேர் பயன் அடைந்திருக்கிறார்கள்.

பினாமி நிலங்கள் மீதான நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வருகின்றன. பட்டாக்களை புதிதாக பதிவு செய்வதன் மூலம் பினாமி நிலங்கள் பற்றிய விவரங்கள் வெளியே கொண்டுவரப்படுகின்றன. பினாமி நிலங்கள் கண்டு பிடிக்கப்பட்டு அவற்றை அரசு மேற்கொள்ளும். சில மாவட்டங்களில் 9 லட்சத்துக்கும் மேற்பட்ட நிலக் குத்தகைதாரர்கள் இருக்கிறார்கள். ஆனால் 4 லட்சம் குத்தகைதாரர்கள் தான் கணக்கிடப்பட்டுள்ளனர். இதன் முக்கிய காரணம் நிலக் குத்தகைதாரர்கள் நிலச்சொந்தக்காரர்களின் பயமுறுத்தலுக்குள் இருந்து வருகிறார்கள் என்பதுதான்.

இதற்காக 5 பேர் கொண்ட குழு ஒன்றும் அமைக்கப்படவிருக்கிறது. இந்தக் குழுவில் ஒரு ஆதிதிராவிட குத்தகைதாரர், 3 சமூக சேவகர்கள் ஆகியோர்களும் இருப்பார்கள்.

வருவாய்த் துறை அதிகாரிகள், தாசில்தார்கள் மற்றும் ஊழியர்களுக்கு 2 கோடியே 8 லட்சம் ரூபாய் செலவில் குடியிருப்புகள் கட்டப்பட்டு வருகின்றன.

இவ்வாறு அமைச்சர் எஸ். டி. எஸ். கூறினார்.

## வரவேற்பு

வருவாய்த்துறை அமைச்சர் எஸ். டி. எஸ். வந்தபோது ரெயில்நிலையத்தில் அவருக்கு உற்சாக வரவேற்பு அளிக்கப்பட்டது.

சட்டமன்ற உறுப்பினர்கள் வேலப்பன், தனபால் மற்றும் கழகச்செயல் வீரர்களும், மன்ற மறவர்களும் திரண்டு வந்து மாலை அணிவித்து வரவேற்றனர்.

# அரசியல் சட்டம் மூலம் ஆதிதிராவிடர்களுக்கு உரிய பாதுகாப்பு

## ஆஸ்திரேலியாவில் பிரதமர் இந்திரா உறுதி

கான்பெர்ரா, அக். 5— இந்தியாவில் ஆதிதிராவிடர்கள் மற்றும் தாழ்த்தப்பட்டோர் சிறுபான்மையினருக்கு அரசியல் சட்டத்தின் மூலம் உரிய பாதுகாப்பு அளிக்கப்பட்டிருக்கிறது என்று பிரதமர் இந்திராகாந்தி உறுதியுடன் தெளிவுபடக் கூறினர்.

ஆஸ்திரேலியாவில் உள்ள மெல்போர்னில் நடக்கும் காமன்வெல்த் மாநாட்டில் கலந்து கொள்ள சென்றிருக்கும் பிரதமர் இந்திராகாந்தி நேற்று கான்பெர்ராவில் நடைபெற்ற தேசிய பத்திரிகையாளர்கள் கூட்டத்தில் பேசினர்.

பல்வேறு நாடுகளைச் சேர்ந்த நிருபர்கள் பிரதமரிடம் கேள்விகள் கேட்டார்கள். முன்னதாக தேசிய பத்திரிகையாளர் சங்கம் இந்திராவுக்கு விருந்தொன்று அளித்தது.

நிருபர்களின் கேள்விகளுக்குப் பதில் அளித்துப் பேசிய பிரதமர் இந்திரா கூறியதாவது:-

இந்தியாவில் தாழ்த்தப்பட்டோர் ஆதிதிராவிடர்கள் மற்றும் சிறுபான்மை சமூகத்தினர் அனைவருக்கும் உரிய பாதுகாப்பு அளிக்கப்பட்டிருக்கிறது.

கல்வி, பொருளாதாரம் ஆகியவற்றில் இந்தசமூகத்தினர் முன்னேற்றம் அடைவதற்கான நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன.

பார்லிமெண்ட் மற்றும் மாநில சட்டசபைகளில் தாழ்த்தப்பட்ட சமூகத்தினருக்கு இடம் ஒதுக்கீடு செய்யப்பட்டுள்ளது. இந்திய அரசியல் சட்டத்தின் மூலம் அவர்களின் உரிமைகள் பாதுகாக்கப்பட்டு வருகின்றன. ஆதிதிராவிட சமூகத்தைச் சேர்ந்த பலர் இந்தியாவில் அமைச்சர்களாவும் ஆளுநர்களாகவும், நீதிபதிகளாகவும் பதவி வகித்து வருகிறார்கள்.

ஆனால் சில இடங்களில் நீண்ட நெடுங்காலமாக சமூக ஏற்றத் தாழ்வுகள் இருந்துவருவது உண்மைதான். இவற்றை அடியோடு ஒழிப்பதற்கான நடவடிக்கைகளையும் அரசு எடுத்து வருகிறது.

இவ்வாறு பிரதமர் இந்திராகாந்தி கூறினர்.

# மேலும் சலுகை...

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

தெரிவித்த கருத்தின்படி இந்தத் தொகை அதிகரிக்கப்படுகிறது.

மேலும் விரிவாக்கம் செய்யும் தொழில்களுக்கு ரூ 50 லட்சம் வட்டி இல்லாத விற்பனை வரிக்கடன் வழங்கப்படும்.

புதிதாக சில தொழில்களுக்கும் இந்தக் கடன் தொகை விரிவாக்கப்பட்டுள்ளது.

அதன்படி மின்அணு, மருந்துகள், மோட்டார் வாகன உபரிப்பொருள்கள் தயாரிக்கும் தொழில்களும், இந்த உதவியைப் பெற முடியும்.

முதல்வர் புரட்சித் தலைவரின் கட்டளையை ஏற்று நிதி அமைச்சரும், ஊரகத் தொழில் அமைச்சரும்மின்துறைஅமைச்சரும் நானும் அரசு அதிகாரிகளுடன் கலந்து பேசி புதிதாகத்தொழில்களை துவக்குபவர்கட்கு மற்ற மாநிலங்களில் என்ன என்ன சலுகைகளை அளிக்கிறார்கள் என்பதைக் கலந்து ஆலோசித்து இந்த முடிவுகளை எடுத்து இருக்கிறோம்.

தமிழகத்தில் தொழில் துறையில் பின்தங்கிய தாலுக்காக்களாக 33 தாலுக்காக்களை மத்திய அரசு அறிவித்துள்ளது.

தமிழக அரசு 24 தாலூக்காக்களை பின் தங்கியதாலூகாக்களாக அறிவித்துள்ளது.

இத்தாலுகாக்களில் துவக்கப்படும் சிறிய — நடுத்தர - பெரியதொழில்களுக்கு அரசு உதவித் தொகை ரூ.15லட்சம்வரை வழங்கி வருகிறது.

## புதிய தாலுகாக்கள்

இது தவிர புதிதாக 6 தாலுக்காக்களை தேர்ந்து எடுத்து அறிவிக்க இருக்கிறோம்.

அறிவிக்கப்பட்ட இருக்கும் தாலுகாகளில் சாலை வசதிகள், மூலப்பொருள்கள், தண்ணீர்வசதி ஆகியவை ஒருங்கே இருப்பதாக தேர்ந்து எடுத்து அறிவிக்க இருக்கிறோம்.

இப்படி அறிவிப்பதன் மூலம் உடனடியாக இங்கே தொழில்களை துவக்க முடியும்.

## மின்வெட்டு விலக்கு விஸ்தரிப்பு

மேலும் புதிதாக 5 தொழில் பேட்டைகளை தேர்ந்து எடுத்து அங்கே துவக்கப்படும் தொழிற்சாலைகள்ஏற்கனவே இயங்கி வரும் தொழிற்சாலைகள் ஆகியவற்றிற்குதொடர்ந்து 5 ஆண்டுகளுக்கு மின்வெட்டு இல்லை என்று அறிவிக்கப்பட்டுள்ளது.

தூத்துக்குடி, மானாமதுரை, புதுக்கோட்டை, கடலூர், கும்மிடிப்பூண்டி ஆகிய 5 தொழில் பேட்டைகளும் இவ்வாறு அறிவிக்கப்படுகிறது.

கடலூர் தொழிற்பேட்டைக்கு 1000 ஏக்கர் நிலமும் தூத்துக்குடி தொழில் பேட்டைக்கு 700 ஏக்கர் நிலமும் கும்மிடிப்பூண்டி தொழில் பேட்டைக்கு 600 ஏக்கர் நிலமும் கையகப்படுத்தப்பட்டுள்ளது.

இந்தியாவிலேயே தமிழகம் தொழில் துறையில் மூன்றாவது இடத்திலிருக்கிறது.

மராட்டியம்முதலிடம் வகிக்கிறது.

வரும் 12-ம் தேதி நானும், தொழில் இலாகா செயலாளரும் பம்பாய், அகமதாபாத்நகர்களுக்குச் சென்று அங்குள்ள தொழில் அதிபர்களை, தொழிலதிபர்கள் சங்கத்தினர் ஆகியவர்களைச் சந்தித்து தமிழகத்தில் தொழில்களைத் துவங்க வருமாறு அழைப்பு விடுப்போம்.

தமிழ்நாடு எலெக்ட்ரானிக் கார்ப்பரேஷன் மூலம் டெலிவிஷன் பாகங்களை தயாரித்து விற்பனை செய்ய லைசென்ஸ் பெற்று இருக்கிறோம்.

இந்த புதிய தொழிற்சாலைக்கு பிலிப்ஸ் கம்பெனியின் தொழில நுட்ப உதவியை கேட்டு இருக்கிறோம்.

மேலும் எலக்ட்ரானிக், எக்ஸ்ரே கருவிகள் வாகனங்கள் ஆகியவைகளை தயாரிக்க லைசென்ஸ் பெற்றிருக்கிறோம்.

இவ்வாறு அமைச்சர் திருநாவுக்கரசு கூறினர்.



# ஆதிதிராவிடர் வசிக்கும் பகுதிகளில் கோயில்கள்: ஆர். எம். வீ. அறிவிப்பு

**சென்னை, அக். 5— ஆதிதிராவிடர்களின் கோரிக்கைக் கிணங்க ஆதிதிராவிடர்களின் குடியிருப்புகளில் கோவில்கள் கட்டித்தர தமிழக அரசு உத்தரவு பிறப்பித்துள்ளது என்று அறநிலையத்துறை அமைச்சர் ஆர். எம். வீ. தெரிவித்தார்.**

செய்தி அறநிலையத் துறை அமைச்சர் ஆர். எம். வீ. 'வளரும் தமிழகம்' என்ற தலைப்பில் நேற்று இரவு 7 மணிக்கு சென்னை வானொலியில் உரை நிகழ்த்தினர்.

அப்போது அவர் கூறியதாவது:-

இறைவழிபாடு அல்லது ஆலய வழிபாடு என்பது மனித சமுதாயத்தில் ஆதிகாலம்தொட்டே எல்லோராலும் ஏற்றுக்கொள்ளப்பட்டஒன்றாகும். உலகிலேயே கட்டிடக்கலையில்ஒப்பற்றவர்கள் தமிழர்கள் என்பது ஆங்கிலக் கலைக்களஞ்சியத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது.

## வருமானம் குறைவுதான்

பண்டைக் காலந்தொட்டே தமிழ் நாட்டு திருக்கோயில்கள் இறை வழிபாட்டுத் தலங்களாக மட்டும் இன்றி பல்கலைக் கழகங்களாவும் கல்விக்கூடங்களாகவும், இசை, நடனம் சிற்பம் ஆகியவற்றை வளர்க்கும் பல்கலைக்கழகங்களாகவும் விளங்கி வந்துள்ளன.

இன்று அறநிலையத் துறை ஆணைக்குட்பட்ட ஆலயங்களின் எண்ணிக்கை 33 ஆயிரத்து 620. இந்த அறநிலையங்களுக்கு சொந்தமான நஞ்சை, புஞ்சை நிலம் 5 இலட்சம் ஏக்கர் என்று கணக்கிடப்பட்டுள்ளது.

ஆனால் ஆண்டு வருமானமோ சுமார் 16 கோடி ரூபாய்தான். வருமானம் முறையாக வருவதில்லை.

ஆதிதிராவிடமக்கள் தாங்கள் வாழும் குடியிருப்பு பகுதிகளில் கிராமக் கோயில்கள் வேண்டும் என்று கோரிக்கை வைத்திருக்கிறார்கள். அத்தகைய கோயில்களை அறநிலையத் துறை சார்பில் கட்டிக் கொடுக்க அரசு ஆணை பிறப்பித்திருக்கிறது.

## மறந்து விடக்கூடாது

கோயில்களில் திருப்பணி தேவையா என்று கேட்பவர்களும் இருக்கிறார்கள். கோயில்களில் திருப்பணி என்பது நமது முன்னோர்கள் ஏற்படுத்திய கலைச் செல்வங்களாக உள்ள ஆலயங்களை காப்பாற்றுவது மாத்திரம் இன்றி திருப்பணியின் மூலம் செலவிடப்படும் கோடிக்கணக்கான ரூபாய்களில் பெரும்பகுதி கட்டிட சிற்பக் கலைஞர்கட்கு வாழ்வளித்து பல்லாயிரக்கணக்கானதொழிலாளர்களுக்கு வேலை வாய்ப்பளிக்கும் சமுதாயப்பணி என்பதை மறந்து விடக் கூடாது.

பெரிய ஆலயங்களில் ஆண்டுக்கு 15 லட்ச ரூபாய் செலவில் சுமார் 2 ஆயிரம் ஆதிதிராவிடஏழை எளிய பிற்படுத்தப்பட்ட மணமக்களுக்கு இலவசமாகத் திருமணங்கள் நடத்தி வைக்கப்பட்டு வருகிறது.

இவ்வாறு அமைச்சர் ஆர். எம். வீ. பேசினர்.



சோப் கம்பெனி தொழிலாளர்கள்

## ஆலோசனை குழுவில் மருதாசலம்

கோவை, அக். 5— தமிழ்நாட்டில் உள்ள அனைத்து சோப்புக் கம்பெனிகளில் பணிபுரியும் தொழிலாளர்களுக்கு குறைந்தபட்சக் கூலி நிர்ணயம் செய்ய ஆலோசனைக் குழுவை தமிழக அரசு நியமித்துள்ளது.



தமிழ்நாடு குடிநீர் வடிகால் வாரியத் தலைவராக ஏ. கே. அரங்கநாதன் பதவி ஏற்றுக் கொண்டார். அண்ணா தொழிற்சங்க பேரவைச் செயலாளர் வை. பெருமாள் உடனிருக்கிறார்.



புதுக்கோட்டை நகரின் சிறந்த, முதன்மையான திரையரங்கமாக தேர்ந்தெடுக்கப்பட்ட பிரகதாம்பாள் திரையரங்கத்திற்கு ரோட்டரி பரிசுக் கேடயத்தை ரோட்டரி கவர்னர் R.T.N. PHF. M. சண்முகம், ஜெனித் R.ராதாகிருஷ்ணனுக்கு வழங்குகிறார்.

# இறக்கும் தருவாயில் இருந்தவரின் உயிரை காப்பாற்ற விமானத்தில் பறந்த இருதயம்

கேப்டவுன், அக். 5— ஆஸ்பத்திரியில் உயிருக்கு மன்றாடிக் கொண்டிருந்த ஒருவரின் உயிரைக் காப்பாற்ற இறந்தவர் ஒருவரின் இருதயம் விமானத்தில் எடுத்துச் செல்லப்பட்டு இருதய மாற்று அறுவை சிகிச்சை செய்யப்பட்டது.

மருத்துவத் துறையில் புதுப் பெரும் சாதனை எனக் கருதப்படும் இச்சம்பவம் பற்றிய விவரம் வருமாறு:

போர்ட் எலிசபெத் நகரில் நடந்த சாலை விபத்து ஒன்றில் 18 வயதுவாலிபன் ஒருவன் உயிரிழந்தான்.

அதே நேரத்தில் தென்னாப்பரிக்கத் தலைநகரான கேப்டவுன் நகர ஆஸ்பத்திரியில், 29 வயது அமெரிக்கர் ஒருவர் இருதயக் கோளாறால் உயிர் ஊசலாடும் நிலையில் இருந்தார்.

சாலை விபத்தில் இறந்த வாலிபன் மாரீஸ் மின்னியின் இருதயத்தை ஆஸ்பத்திரியில் உள்ள அமெரிக்கருக்கு பொருத்த டாக்டர்கள் முடிவு செய்தனர்.

அதன்படி, மின்னியின் இருதயம் அறுவை சிகிச்சை மூலம் அகற்றப்பட்டு, வின்ஸ்டன் வின்காம்ப் என்ற மருத்துவ விஞ்ஞானியால், புதிதாக கண்டுபிடிக்கப்பட்டுள்ள ''மாஜிக் பாக்ஸ்'' என்ற விசேஷ பெட்டியின் மூலம் கேப்டவுனுக்கு எடுத்துச் செல்லப்பட்டது.

சுமார் 640 கிலோ மீட்டர் தூரம் விமானத்தில் இருதயம் எடுத்துச் செல்லப்பட்டது இதுவே முதன் முறையாகும்.

பிறகு அந்த இருதயம், அமெரிக்கருக்கு அறுவை சிகிச்சை மூலம் வெற்றிகரமாகப் பொருத்தப்பட்டது.

மருத்துவ உலகில் இவ்வாறு ஒரு இடத்தில் இருந்து இருதயத்தை எடுத்துச் சென்று வேறு ஆஸ்பத்திரியில் பொருத்தப்பட்டது இதுவே முதன் முறையாகும்.

# ப. உ. ச. கேள்வி...

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

அவர் போட்ட பிச்சை தான் கருணாநிதிக்கு

கருணாநிதி முதல்முறையாக கைது செய்யப்பட்டு 48 நாட்கள் சிறையிலிருந்தார். நானும் இருந்தேன். அப்போது வெளியே பஸ் கொளுத்தப்படவில்லை. யாரும் தீவைத்துகொள்ளவில்லை. இன்று மட்டும் எப்படி வந்தது?

இந்திராவுக்கு கறுப்புக் கொடி காட்டும் திட்டம் அவசரத்தில் போடப்பட்டது. இப்போது திட்டம் போட்டு ஒரு மாதம் சுற்றிச்சுற்றி வந்து போடப்பட்டது.

## தைரியம் இருந்தால்

இந்த ஆட்சியைக் கவிழ்க்க எந்த ஆண் மகனும் பிறக்கவில்லை.

இந்த ஆட்சி வேண்டாம் என்றால் வேறு எந்த ஆட்சி வேண்டும்? தி.மு.க.வினரால் ஆட்சிக்கு வர முடியுமா?

தேர்தல் வந்தால் முதலமைச்சராவது புரட்சித் தலைவர் தானே தவிர வேறுயாரும் இல்லை.

கருணாநிதிக்கு தைரியமிருந்தால் தி.மு.க. ஆட்சியை பிடிக்கும் என்று சொல்லட்டுமே? தேர்தல் என்றாலே காங்கிரசை தேடுகிறார்கள்.

கருணாநிதியின்பெயரைச் சொன்னதால்தான் காங்கிரஸ் தோற்றது என்றனர் இந்திரா காங்கிரசார்.

காங்கிரஸ் கூட்டு சேராது. தி.மு.க. வேண்டுமானால்சேரலாம். அப்போது காங்கிரஸ்தான் தலைமை தாங்கும். இது கருணாநிதிக்குத் தெரியும்.

## இது தான் அண்ணா வழியா?

11ந் தேதி தியாகிகள் தினம் என்று அறிக்கை விட்டிருக்கிறார்.

தான் சிறையிலிருந்த போது விடுதலைக்காக— விடுதலை செய்ய தீக்கிரையாகினர் என்று கருணாநிதி சொல்வார். இது அண்ணா வழியா?

இந்திஎதிர்ப்பு போராட்டத்தில் திருச்சி சின்னசாமியும் சென்னை சிவலிங்கமும் போன்ற 8 பேர் மாண்டபோது அண்ணா சொன்னார், முரசொலியில இந்தபெயரைக்கூடப்போடகூடாது. இது காட்டுமிராண்டித்தனம் என்றார்.

ஆனால் கருணாநிதி ஊருக்கு ஊர் போய் சொல்லப் போகிறார் இப்போது. கட்சியினுடைய கொள்கை வளர வேண்டுமா? தனி மனிதன் வளர வேண்டுமா? தன்னை வைத்து தான் கட்சிஎன்று நினைத்து விட்டார் கருணாநிதி.

## பெரியார் அறக்கட்டளை

பெரியார் வாங்கிய காசில் சல்லிக் காசு கூட சொந்தமாக எடுத்துக் கொள்ளவில்லை. அறக்கட்டளை துவக்கி வைத்து விட்டுப் போயிருக்கிறார். அதன் தலைவர் வீரமணி. வீரமணி ரொம்ப வேகமாகப் போகிறார்.

பெரியார் எதற்காக அறக்கட்டளை துவக்கினார் என்பதை மக்கள் கேட்கிறார்கள். பகுத்தறிவை வளர்க்க அறக்கட்டளை துவக்கினர். அது அந்த வழியிலாசெல்கிறது?

நான் அரசை கேட்டுக் கொள்கிறேன். அறக்கட்டளைகள் எந்தவிருப்பத்திற்காக துவக்கப்பட்டதோ அந்த எண்ணம் நிறைவேறு விட்டால் அதை நிறைவேற்ற அரசு முன்வர வேண்டும்.

பெரியார் அறக்கட்டளை பகுத்தறிவு பிரச்சாரத்திற்காகத்தானே தவிர கருணாநிதிக்கு லாலி பாட அல்ல.

கருணாநிதி மீது எனக்கு கோபமில்லை. கட்சிக் கொள்கையை அழிக்க வேண்டும் என அவர் நினைப்பது பிடிக்கவில்லை.

## தமிழை அசிங்கப் படுத்தாதீர்கள்

தி.மு.க. கொஞ்சம் அதிகமாக வார்த்தைகளை விட்டுப் பார்க்கிறது.

தி.மு.க. தலைவரின் குடும்ப பத்திரிகையே அவரை புகழ்ந்து எழுதுகிறது. அண்ணாகூட பத்திரிகை நடத்தினர். எந்த பக்கத்திலாவது எங்காவது அறிஞர் என்று வந்ததுண்டா?

கருணாநிதியை தமிழுக்கு ஒப்பிட்டு 'தமிழுக்கு சிறையா?' என்று எழுதியிருக்கிறார்கள். தயவு செய்து கேட்கிறேன் தமிழை அசிங்கப்படுத்தாதீர்கள்.

உலகத் தமிழ் மாநாடு நடத்திய முதல்வர் புரட்சித்தலைவர் மணிமகுடத்திற்கு வைரம் போல தஞ்சையில் தமிழ் பல்கலைக்கழகத்தை துவக்கினர்.

கருணாநிதி முதலமைச்சராக இருந்தார், நானும் அமைச்சராக இருந்தேன். அப்போது கருணாநிதிக்கு வராத உணர்வு இன்றுபுரட்சித்தலைவருக்கு வந்திருக்கிறதே, அப்போது கருணாநிதிக்கு அந்த எண்ணம் ஏன் வரவில்லை?

மனோகரன் கையில் தான் தடிவைத்திருக்கிறார் என்று பார்த்தோம். அவர் நாக்கும் தடித்துவிட்டது. அமைச்சராக மனோகரன் இருந்த போது அவரது அண்ணாநகர் வீட்டை ஒன்றரை லட்ச ரூபாய்க்கு கருணாநிதி கேட்டார்,

## தன்னை வளர்க்க கட்சி

'தரமாட்டேன் என்னுடைய வெள்ளைமாளிகையில் கொள்ளைக்காரன்கால் படக்கூடாது' என்றார் மனோகரன். இன்றைக்கு கருணாநிதியை தலைவர் என்கிறார் அதேமனோகரன். வார்த்தைகளை ஜாக்கிரதையாக பயன்படுத்த வேண்டும்.

திராவிட முன்னேற்றக் கழகம் என்று பெயர் வைத்துக்கொண்டு தமிழன் என்று பேசி திராவிட உணர்வை அழிக்க முயன்றால் அது நடக்காது. தி.மு.க.வுக்குராஜயோகம் அஸ்தமித்து விட்டது. அதன் தலைவர் கட்சி நடத்துவது தன்னை வளர்த்துக் கொள்ளத்தான்.

## வாயை திறந்தால்

கருணாநிதி பேச ஆரம்பித்தால் 'லஞ்சம்' கோடி, 'கோடி' என்ற வார்த்தைகளைத் தவிர வேறு வார்த்தைகள் வராது.

வெங்காயம் சாப்பிட்டவன் வாயைத் திறந்தால் வெங்காய வாசனை வரும். பூண்டு சாப்பிட்டவன் வாயை திறந்தால் பூண்டு வாசனை வரும். கருணாநிதி வாயைத் திறந்தால் 'கோடி கோடி'தான் வருகிறது.

இவ்வாறு பொதுச் செயலாளர் ப.உ.ச. கூறினர்.

தலைமைக் கழக அறிக்கை எண் 163.81

## வடாற்காடு மாவட்டம் ஆம்பூர் நகரக் கழகத் தோழர்களுக்கு...

கழக விதிமுறைகளுக்கு மாறாக நடந்து கழகத்தின் நற்பெயருக்குக் களங்கம் விளைவிக்கும் முறையில் செயல்பட்ட காரணத்தால் வடாற்காடு மாவட்டம் ஆம்பூர் நகரத்தைச் சார்ந்த,

சி. பலராமன் — ஆம்பூர்

ஆர். சீனிவாசன் — ஆம்பூர்

மா. சம்பத் — ஆம்பூர்

ஆகிய மூவரும் இன்று முதல் சாதாரண உறுப்பினர் பொறுப்பு உட்பட அனைத்துப் பொறுப்புகளில் இருந்தும் நீக்கி வைக்கப்படுகிறார்கள்.

கழக, சார்பு மன்றத் தோழர்கள் யாரும் அவர்களுடன் எவ்விதத் தொடர்பும் கொள்ள வேண்டாம் எனக்கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள்.

மாண்புமிகு புரட்சித்தலைவர் அவர்களின் ஒப்புதலுடனும், பொதுச் செயலாளர் திருமிகு ப. உ. ச. அவர்களின் அனுமதியுடனும் இவ்வறிவிப்பு வெளியிடப்படுகிறது.

எச். வி. அண்டே
அமைப்புச் செயலாளர்
அனைத்திந்திய அண்ணா தி.மு.கழகம்

சென்னை-14
5.10.81

★ அரசு ஊழியர்களுக்கு ஊதிய உயர்வு

★ நுகர்பொருள் வாணிபக்கழக ஊழியர்களுக்கு போனஸ்

## வாரி வழங்கிய வள்ளல்

# புரட்சித்தலைவருக்கு குவியும் நன்றிகள்



சென்னை, அக். 5- அரசு ஊழியர்களுக்கு அகவிலைப்படியையும், நுகர் பொருள் வாணிபக் கழக ஊழியர்களுக்கு போனசையும் வழங்கிய முதலவர் புரட்சித்தலைவருக்கு பல்வேறு சங்கங்கள் பாராட்டும்நன்றியும் தெரிவித்துள்ளன.

கேட்காமலேயே வாரி வழங்கிய வள்ளலுக்கும் அவரது ஆட்சிக்கும நன்றி தெரிவிப்பதாக மனம் திறந்த பாராட்டை தெரிவித்துள்ளனர்.

### ஊர்தி ஓட்டுநர் கழகம்

அரசு ஊழியர்கட்கு அகவிலைப்படி உயர்வு அளித்த பொன் மனச்செம்மல் புரட்சித் தலைவருக்கு பாராட்டும் நன்றியும் தெரிவிப்பதாக தமிழ்நாடு அரசு ஊர்தி ஓட்டுநர்கள் கழகம் தெரிவித்துள்ளது.

அரசு ஊழியர்கட்கு ரூ.7-ல்இருந்துரு. 30வரை சம்பள உயர்வு மற்றும் பல சலுகைகளை கேட்காமலேயே முதல்வர் புரட்சித்தலைவர் வழங்கியுள்ளார்.

அதற்கு எங்கள் சங்கத்தின் சார்பில் நன்றியைக் காணிக்கையாக்குகிறோம் என்று இந்த சங்கத்தின் மாநில பொதுச்செயலாளர் கே.சீனிவாசன் தெரிவித்துள்ளார்.

### ஆசிரியர் மன்றம்

தமிழ்நாடு இடைநிலை ஆசிரியர் மன்றத்தின் புதுக்கோட்டைமாவட்டச் செயலாளர் வே. குணசீலன் அந்த சங்கத்தின் சார்பில் முதல்வர் புரட்சித்தலைவருக்கு நன்றி தெரிவித்துள்ளார்.

அரசு ஊழியர்கள் அனைவருக்கும் ஆகஸ்ட் முதல் தேதியிலிருந்து முன் தேதியிட்டு 10-வது தவணை கிராக்கிப்படி உயர்வை முதல்வர் புரட்சித்தலைவர் அளித்துள்ளார். அதற்கு மன்றத்தின் சார்பில் வாழ்த்துக்கள் நன்றி என்று குணசீலன்தெரிவித்துள்ளார்.

### ஆசிரியர் முன்னேற்றக் கூட்டணி

அரசு ஊழியர்கட்கு அகவிலைப்படி உயர்வு அளித்துள்ளதன் மூலம் ஏழரை லட்சம் குடும்பங்களுக்கு மகிழ்ச்சி ஏற்பட்டுள்ளதாக தமிழ்நாடு தொடக்கப்பள்ளி நடுநிலைப் பள்ளி, ஆசிரியர் முன்னேற்றக் கூட்டணியின் மாநிலப் பொதுச் செயலாளர் எம். பாலசுப்பிரமணியம் தெரிவித்துள்ளார்.

அவர் வெளியிட்டுள்ள அறிக்கையில் கூறி இருப்பதாவது:-

ஆசிரியர்கள், அரசு ஊழியர்கட்கு தமிழக அரசு ரூ. 7 முதல் ரூ.30வரை விலைவாசிப்படி உயர்வு அளித்துள்ளது. ஏழரை லட்சம் குடும்பங்களுக்கு மகிழ்ச்சி அளிப்பதாக உள்ளது.

புரட்சித்தலைவர் ஆட்சிப் பொறுப்பேற்ற காலத்திலிருந்தே ஆசிரியர்கட்கும், அரசு ஊழியர்கட்கும் ஒளிமயமான நல்வாழ்வு கிடைத்து வருகிறது.

ஊழியர்கள் கேட்பதற்கு முன்பே அவர்களின் தேவை அறிந்து தாயைப்போல உதவி வரும் புரட்சித்தலைவருக்கும் நிதி அமைச்சர் டாக்டர் நாவலருக்கும், கல்வி அமைச்சர் அரங்கநாயகத்திற்கும் நன்றியும்,பாராட்டும் தெரிவித்துக்கொள்கிறேன்.

இவ்வாறு பாலசுப்பிரமணியம் தெரிவித்துள்ளார்.

### நுகர்பொருள் தொழிலாளர் சங்கம்

தமிழ்நாடுநுகர்பொருள் வாணிபக்கழகத்தில் பணிபுரியும் 7500 தொழிலாளர்கள் பயனடையும் வகையில் 15 சதவிகிதம் போனஸ் அளிக்க ஆணை பிறப்பித்த தமிழக முதல்வருக்கும், உணவு மற்றும் நிதி அமைச்சருக்கும் தமிழ் நாடு நுகர்பொருள் வாணிபக்கழக தொழிலாளர் சங்கம் (பேரவையுடன் இணைந்தது) நன்றி தெரிவித்துள்ளது.

இந்த சங்கத்தின் மாவட்டத்தலைவர் குமாரலால், மாவட்ட செயலாளர்விஜயரங்கன்ஆகியோர் பாராட்டுத் தெரிவித்துள்ளனர்.

### காவல்துறை அமைச்சுப் பணியாளர் சங்கம்

தமிழக முதல்வருக்கு சென்னை நகர காவல் துறை அமைச்சுப் பணியாளர் சங்கத் தலைவர் கே. பி. ஜனகன் நன்றி தெரிவித்துள்ளார்.

அவர் வெளியிட்டுள்ள அறிக்கையில் கூறி இருப்பதாவது:-

தமிழக வரலாற்றில் ஒரு புதிய சகாப்தத்தை உருவாக்கி வரும் தமிழக முதல்வர் அரசு ஊழியர்களின் நல் வாழ்வை நிலை நிறுத்தி அறிவித்த அகவிலைப்படி எங்களது நெஞ்சங்களில் என்றும் நிலைத்து இருக்கும்.

போராடிப் பெறுவதை வாதாடிப் பெறுவோம் என்று இருந்த நிலைமாறி போராடாமல், வாதாடாமல் இதுவரை யாருமே செய்திட முடியாத இந்த அகவிலைப்படிஉயர்வு அறிவிப்பு இருக்கிறது. இன்னும் எத்தனையோ சாதனைகளை அரசு ஊழியர்கட்கு இந்த அரசு செய்யக் காத்திருக்கிறது என்பதில் எங்களுக்கு சந்தேகமில்லை.

அகவிலைப்படி உயர்வு அளித்த முதல்வருக்கு எங்கள் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறோம் என்று கே. பி. ஜனகன் தெரிவித்துள்ளார்.

### அலுவலர் கழகம்

அகவிலைப்படி அறிவிப்பு ஏமாற்றம் என்றுஅறிக்கை விடும் எத்தர்களுக்கு தமிழ்நாடு அரசு அலுவலர் கழகத்தின் தலைவர் சங்கரன், துணைத் தலைவர் சுந்தர ராஜும் வெளியிட்டுள்ள அறிக்கையில் பதில்அளித்துள்ளனர்.

அவர்கள்வெளியிட்டுள்ள அறிக்கையில் கூறியிருப்பதாவது:—

தமிழ்நாடு அரசு அலுவலர்கட்கு 10 வது அகவிலைப்படி உயர்வினை வழங்கிய முதல்வர் புரட்சித் தலைவருக்குநன்றி தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

ஆனால் அரசியல் வாதிகளைப் போல அறிக்கை விடுக்கும் சிலர் இதுஏமாற்றம் என்கிறார்கள். எது ஏமாற்றம்?

அடுக்கடுக்காக 10 அகவிலைப்படியை அளித்திருக்கிறாரே புரட்சித்தலைவர். இது ஏமாற்றமா?

7 ஆண்டு காலம் முதல்வராக இருந்து 7 அகவிலைப்படியை கொடுக்காமல் ஏமாற்றினாரே அது ஏமாற்றம் இல்லையா?

பாவிகளே, உண்மையை மூடிமறைக்காதீர்கள் அரசுஊழியர்களை ஏமாறாதீர்கள் என்று இவர்கள் தெரிவித்துள்ளனர்.

### குடிநீர் வடிகால் வாரியம் ஊர்தி ஓட்டுநர் சங்கம்

தமிழக அரசு ஊழியர்களுக்கு தீபாவளி இனிப்பாக அகவிலைப்படியை உயர்த்தி ஊதிய உயர்வு அளித்த முதல்வர் புரட்சித் தலைவருக்கும் நிதி அமைச்சருக்கும் தமிழ் நாடு குடிநீர் வடிகால் வாரியம் ஊர்தி ஓட்டுநர் தலைமைச் சங்கத்தின் சார்பில் அதன் பொதுச் செயலாளர் கு. குப்புசாமி நன்றி தெரிவித்துள்ளார்.

### ஆசிரியர் இணைப்பு இயக்கம்

தமிழ்நாடு தொடக்கப் பள்ளி ஆசிரியர் இணைப்பு இயக்கப் புதுக்கோட்டைச் மாவட்ட செயலாளர் தி.முத்து ஒரு அறிக்கையில் கூறியிருப்பதாவது அரசு ஊழியர்களுக்கு 10-வது அகவிலைப்படியினை வாரி வழங்கும் பாரிவள்ளல் புரட்சித் தலைவர் வழங்கி இருக்கிறார்.

எவருமே எதிர் பார்த்திடாத வகையில் அகவிலைப்படி உயர்வை அண்ணாவின் வழியில் அறிவித்துளளார்.

இந்தியாவில் வேறு எந்த மாநிலமும் செய்ய முடியாத சாதனைகளை ஆசிரிய சமுதாயத்தின் முன்னேற்றத்திற்காக தேவைப்படும் போதெல்லாம் பல்வேறு சலுகைகளை அளித்திட்டபுரட்சித்தலைவருக்கு நன்றிக்கடன் பட்டுள்ளதாக சி. முத்து தெரிவித்துள்ளார்.

### குமரி மாவட்ட செயலாளர்

ஆசிரியர் இணைப்பு இயக்கத்தின் குமரி மாவட்டச் செயலாளர் இரா. சுப்பிரமணியம் வெளியிட்டுள்ள அறிக்கையில் கூறியிருப்பதாவது:-

10-வது அகவிலைப் படியை தாய்போல் நினைந்தூட்டி வழங்கிய முதல்வருக்கும், நிதிஅமைச்சருக்கும் இயக்கத்தின் சார்பில் நன்றி தெரிவித்துள்ளனர்.

### மதுரை மாவட்டம்

ஆசிரியர் இணைப்பு இயக்கத்தின் மதுரை மாவட்ட செயலாளர் கி.இ.அமல்ராஜ் கூறி இருப்பதாவது:-

வரலாற்றுப் புகழ்மிக்க தமிழ் பல்கலைக்கழகத்தை தஞ்சையில் துவக்கியதற்கும் 10-வது அகவிலைப் படியை வழங்கியதற்கும், தீபாவளிகடன்தொகையை உரிய காலத்தில் வழங்கியதற்கும் பாராட்டுகளையும் நன்றியினையும், பணிவுடன் தெரிவிப்பதாக அமல்ராஜ் கூறி இருக்கிறார்.

---

திருவல்லிக்கேணியில்

## அமைச்சர் கே. ஏ. கே. பேசுகிறார்

சென்னை, அக். 5— சென்னை 91-வது வட்டம் கழககிளை சார்பில் பேரறிஞர் அண்ணா பிறந்தநாள் விழா நாளை (செவ்வாய்) மாலை 7 மணிக்கு திருவல்லிக்கேணி நெடுஞ்சாலை ஸ்டார் திரையரங்கு அருகே சிறப்பாக கொண்டாடப்படவிருக்கிறது.

வட்ட செயலாளர் எம்.சி. ரவீந்திரன் தலைமை வகிக்கிறார். அமைச்சர் கே.ஏ.கே. கழகக் கொடி யேற்றிவைத்து பேசுகிறார்.

மு. அன்புதம்பி, கதிர் சோமசுந்தரம், வி. ராஜ்குமார், ஆர்.எஸ். அல்லச் பக்ஷ், மாயவன், வெள்ளைசாமி ஆகியோரும் விழாவில் கலந்து கொண்டு பேசுகின்றனர்.

---

## இல்லாததை இட்டுக்கட்டி வெளியிடுவதா? கா.கா.தே.கா. கண்டனம்

சென்னை, அக். 5— இல்லாத செய்தியை இட்டுக் கட்டி வெளியிட்ட எதிரொலி தி.மு.க. பத்திரிகைக்கு 35-வது வட்ட கா.கா.தே.கா. கடும் கண்டனம் தெரிவித்துள்ளது.

வட்ட கா. கா. தே. கா. தலைவர் ச. பிரான்சிஸ் ஒரு அறிக்கையில் கூறியிருப்பதாவது:

கீழ்ப்பாக்கம் லாக்புரத்தில் உள்ள பள்ளியில் கழிவு நீர் புகுந்து சேறும் சகதியுமாக உள்ளது என்று எதிரொலி வெளியிட்டுள்ளது.

லாக்மா நகரில் மாநகராட்சி பள்ளியே கிடையாது. இரவல் பிணங்களை தேடியலைபவர்கள். இல்லாதபள்ளியில் சேறு சக்தி என்று கூப்பாடு போடுகின்றனர். இதற்குக் கடும் கண்டனம் தெரிவிக்கிறோம்.

இவ்வாறு எஸ். பிரான்சிஸ் அறிக்கையில் கூறியுள்ளார்.

---

திரைப் படத்தில் கூறிய கொள்கைகளை செயல்படுத்த கோட்டையைப் பிடித்த தலைவர்

# புரட்சித்தலைவருக்கு சாந்தாராம் பாராட்டு: முசிறிப்புத்தன் தகவல்

திருச்சி, அக். 5— திரைப்படத்தில் தாம் எடுத்து வைத்த கொள்கைகளை மக்களிடம் கூறி அவற்றைச் செயல்படுத்த கோட்டையைப் பிடித்த தலைவர் என்று புரட்சித் தலைவருக்கு டைரக்டர் சாந்தாராம் பாராட்டுத் தெரிவித்தார். இந்தத்தகவலை முசிறிப்புத்தன் கூறினர்.

திருச்சியில் நடந்த எம். கே. டி. பாகவதர் குடும்ப நிதியளிப்பு விழாவில் பேசிய அனைத்துலக எம்.ஜி.ஆர். மன்ற தலைவர் முசிறிப்புத்தன் கூறியதாவது:-

40 ஆண்டுகளுக்கு முன்பு திரையில் காதலனும் காதலியும் பேசும் வசனத்தைப் புரிந்து கொள்வது கடினம். அப்படிப் புரிந்துகொள்ள வேண்டுமானல் தமிழ் தெரிந்த ஒருவர் உடனிருக்க வேண்டும். அதை மாற்றியவா தியாகராஜபாகவதர்.

பாகவதர் பாடலை அனைவரும் ஒருமுறை முணுமுணுக்கும் அளவுக்கு இசை இனிமையாக இருந்தது. அவரது பாடலை இன்னும் கொஞ்சம் கேட்கமாட்டோமா என்றிருந்தது அந்தஅளவுஇசை நயம் இருந்தது.

அவரது பாடலுக்குப் பிறகுதான் கலைத்துறையை அரசியலுக்குப் பயனபடுத்த முடியுமா என்று ஆராய்ந்து பயன் படுத்தப்பட்டது.

புரட்சித் தலைவரிடம் எந்த அளவுக்கு மக்கள் செல்வாக்கு இருந்தது என்பதை அண்ணா அறிந்து வைத்திருந்தார்.

படத்திலே சொன்ன கொள்கைகளை புரட்சித் தலைவர் நிறைவேற்றி வருகிறார்.

சில நாட்களுக்கு முன்பு பெங்களூரில் சாந்தாராமை சந்தித்தேன். அப்போது அவர், "இந்தியத் திரையுலகைப் பல பேர்கெடுத்துக் கொண்டிருந்தார்கள். எந்தக் கொள்கையை ஒரு கலைஞர் படத்தின் மூலம் பரப்பினாரோ அந்த கலைஞரே கோட்டையைப் பிடித்ததைஉங்கள் தலைவர் மூலம் பார்க்கிறேன்" என்றார்.

### நம்பிக்கை நட்சத்திரம்

புரட்சித் தலைவரின் தொண்டு நாட்டுக்கு மட்டுதல்ல கலைத்துறை சேர்ந்தவர்களுக்கும் ஒரு நம்பிக்கை நட்சத்திரமாக இருந்தது.

பாகவதர்குடும்பத்திற்கு நிதியுதவி செய்வதன்மூலம் பாகவதர் குடும்பத்திற்கு மட்டுமல்ல பல்வேறுதுறையினருக்கும் புரட்சித் தலைவர் பாதுகாவலராக இருக்கிறார்.

30 ஆண்டு காலத்திற்கு முன்பு பதிவு செய்யப்பட்ட பாகவதர் பாடல்களை மீண்டும் பதிவு செய்து மக்களுக்கு தரும் வகையில் புரட்சித்தலைவர் நடவடிக்கை எடுக்க வேண்டும்.

இவ்வாறுமுசிறிப்புத்தன் கூறினர்.

### திருவாரூர் தங்கராசு

நிதி அளிப்பு விழாவில் திருவாரூர் தங்கராசு பேசுகையில் கூறியதாவது:-

தமிழ் மகன் எந்தத்துறையிலிருந்தாலும் காழ்ப்புணர்ச்சிக்குஅப்பாலிருந்து பாராட்ட வேண்டும்.

அந்தந்தத் துறையில் இருப்பவர்களைப் போற்றுவதும், மறைந்த பிறகு நினைவு கூறுவதும் போற்றத்தக்கது. புரட்சித் தலைவர் ஏழிசை மன்னர் குடும்பத்திற்கு நிதியளித்திருக்கிறார்.

பாகவதர் இசையை எண்ணிப் பார்க்கும்போது கிட்டப்பாக்களும் செல்லப்பாக்களும் மட்டுமே முடியும் என்ற சாதனையை முறியடித்தவர் தியாகராஜபாகவதர்.

வசைமொழி, காழ்ப்புணர்ச்சி, பழிமொழி வருவது இயல்பு அவைகளை பாகவதர் பொருட்படுத்தவில்லை.

ஆனல் காழ்ப்புணர்ச்சி கொண்டவர்கள் பாகவதரையும், கலைவாணரையும் அவர்கள் சம்பந்தப்படாத ஒரு வழக்கில் சம்பந்தப் படுத்தினர்.

அப்போது தந்தை பெரியாரும் அண்ணாவும் தாங்கள் நடத்திய ஏடுகளில் "இருபெரும் கண்மணிகள் சிறையில் வாடுகிறார்கள். அவர்களை வெளிக் கொணர்வது நமது கடமை" என்று தலையங்கம் எழுதி ஒரு பெரிய முகாமே நடத்தினார்கள்.

வடமொழியிலும், தெலுங்கிலும் மட்டும் தான் இசையை கொண்டு வரமுடியும் என்று நினைத்த காலத்தில் தமிழில் அதற்கு மேல் இசைபாட முடியும் என்று காட்டியவர் பாகவதர்.



வடமொழியிலும் அவருக்கு ஆற்றல் உண்டு என்பதைக் காட்டியிருக்கிறார்.

மறைந்தாலும் மறந்தாலும் அவர்களை வாழ்த்துவதும் நினைவு கூர்வதும் எனது இயக்கம் என்று காட்டி நிதியளிக்கிறார்கள். அதற்காக பாராட்டுகிறேன்.

பாகவதர் பெயரி நின்று நிலவமுதல்வர் ஏதேனும காரியத்தை செய்யவேண்டும்.

இவ்வாறு திருவாரூர் தங்கராசு கூறினர்.

---



---

# விமான நிலையங்களில் எம். பி.க்கள், உதவி மந்திரிகள் பரிசோதிக்கப்படுவார்கள்

ரெய்ப்பூர், அக் 5— வெளிநாட்டு தூதுவர்கள் மத்திய கேபினட் அந்தஸ்துள்ள மந்திரிகள், மாநில முதல் அமைச்சர்கள் தவிர மற்ற எல்லா முக்கிய பிரமுகர்களும் விமான நிலையங்களில்சோதனைசெய்யப் படுவார்கள் என்று மத்திய விமான போக்குவரத்து சுற்றுலா துறை அமைச்சா சாந்துலால் சந்திரகார் தெரிவித்திருக்கிறார்.

அண்மையில் இந்திய போயிங் விமானம் ஒன்று டெல்லியில் இருந்துஸ்ரீநகர் சென்று கொண்டிருந்த போது லாகூருக்கு கடத்திச் செல்லப்பட்டது தெரிந்ததே.

இப்படிப்பட்ட சம்பவங்கள் மேற்கொண்டும் நடக்காமல் இருக்க விமானங்களில் பயணம் செய்யும் பயணிகளை சோதனையிடுவது கடுமையாக்கப்பட்டிருக்கிறது. ஆட்சேபகரமான ஆயுதங்கள்மற்றும் பொருட்களை பயணிகள் எடுத்துச் செல்லுவதைத் தடுப்பதற்கு பயணிகள் விமானத்தில் ஏறுவதற்கு முன்பு தீவிர பரிசோதனைக்கு உள்ளாவார்கள்.

இப்படிப்பட்ட சோதனைகளிலிருந்து வெளிநாட்டு தூதுவர்கள், கேபினட் அந்தஸ்துடைய மத்திய அமைச்சர்கள், மாநில முதல் அமைச்சர்கள் ஆகியோருக்கு மட்டுமே விதிவிலக்கு அளிக்கப்பட்டிருக்கிறது. இவர்கள் தவிர மத்திய துணை அமைச்சர்கள், உதவி அமைச்சர்கள், மாநில அமைச்சர்கள், பாராளுமன்ற உறுப்பினர்கள் (எம். பிக்கள்) சட்டசபை உறுப்பினர்கள் முதலியவர்கள்உள்பட அனைத்து முக்கிய பிரமுகர்களும விமானப் பயணங்கள் போது சோதிக்கப்படுவார்கள். பாதுகாப்பு நடவடிக்கைகள் தீவிரமாக அமுல் படுத்தப்படும்.

ரெய்ப்பூரில் நடந்த ஒரு நிகழ்ச்சியில் பேசியஅமைச்சர் சாந்துலால் சந்திரகார் இத்தகவல்களைத் தெரிவித்தார்.

அண்மையில் காலிஸ்தான் தீவிரவாதிகள் சிலர் விமானத்தை கடத்திச் சென்ற சம்பவத்தில் சில வெளிநாட்டினரும் ஈடுபட்டிருக்கிறார்கள் என்ற தகவல்களும் கிடைத்திருக்கின்றன என்றும் அவர் கூறினர்.


Published by K. Ravindran on behalf of Thangamani Publications and Printed by him at All India Anna D. M. K. Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road, Madras 600 029

Editor: B. PARASURAMAN

# அண்ணா

சந்தா விவரம்

1 வருடச் சந்தா தொகை ரூ. 145
6 மாதச் சந்தா தொகை ரூ. 74
3 மாதச் சந்தா தொகை ரூ. 37

3 மாதத்திற்குக் குறைவான சந்தாத் தொகை ஏற்றுக்கொள்ளப்படமாட்டாது.

நிர்வாகி;
"அண்ணா"
34, நெல்சன் மாணிக்கம் சாலை,
அமைந்தகரை, : : சென்னை-29

## தமிழகம் முழுவதும் நல்ல பருவ மழை: உற்பத்தி பெருக்கம்

சென்னை, அக். 5- இந்த ஆண்டு தென் மேற்குப் பருவக் காற்றால் தமிழகம் முழுவதும் நல்ல மழை பெய்துள்ளது இதனால் உற்பத்தி விளைச்சல் பெரும் அளவில் இருக்கும் என்று வானிலை ஆராய்ச்சி நிறுவனம் தெரிவித்திருக்கிறது.

இந்த ஆண்டு ஜூன் மாதம் முதற்கொண்டே தென்மேற்கு பருவக் காற்று தமிழகம் பூராவும் வீசத் தொடங்கியது.

இதனால் ஜூன் மாதம் முதல் செப்டம்பர் 30 வரை தமிழகம் முழுவதும் நல்ல மழை பெய்துள்ளது.

செங்கல்பட்டு, திருச்சி, நீலகிரி, தென் ஆற்காடு மாவட்டங்களில் வழக்கம் போல் நல்ல மழையும் மற்ற மாவட்டங்களில் சற்று அதிக அளவில் கூடுதலாகவே பெருமழை பெய்துள்ளது.

இதனால் தமிழகம் முழுவதும் விவசாயம் கொழிக்கும் என்றும் விளைச்சல் பெருகும் நிலை ஏற்பட்டுள்ளது என்றும் சென்னையில் உள்ள பிராந்திய வானிலை ஆராய்ச்சி நிறுவனம் ஒரு அறிக்கையில் தெரிவித்துள்ளது.

சென்ற ஆண்டில் தென் மேற்குப் பருவமழை ராமநாதபுரம் மாவட்டம் தவிர மற்ற பகுதிகளை ஏமாற்றிவிட்டது. தவிர வடகிழக்குப் பருவ மழையும் சென்ற ஆண்டு தமிழகத்துக்குக் கை கொடுக்கவில்லை. அதனால் தமிழகத்தில் வறட்சி நிலை ஏற்பட்டது தெரிந்ததே.

## காங்கிரஸ் பிரமுகர் கழகத்தில் இணைந்தார்

அருப்புக்கோட்டை, அக். 5— மேற்கு ராமநாதபுரம் மாவட்டம் அருப்புக்கோட்டையைச் சேர்ந்த பிரபல காங்கிரஸ் பிரமுகர் ஏ. பி. பழனிச்சாமி, இவர் அந்தக் கட்சியின் நடவடிக்கைகள் பிடிக்காமல் அந்தக் கட்சியைவிட்டு விலகி கழக எம். எல். ஏ. பிச்சை முன்னிலையில் கழகத்தில் சேர்ந்தார்.

அரசுக்கு

## அரசு ஊழியர் தேசீய சங்கம் பாராட்டு

சென்னை, அக். 5— தமிழக அரசு ஊழியர்கட்கும் அகவிலைப்படியை அளித்துள்ள தமிழக அரசுக்கு குறிப்பாக முதலமைச்சருக்கும் நிதியமைச்சர் நாவலருக்கும் தமிழ்நாடு அரசு ஊழியர் தேசியசங்கத்தின் சார்பில் நன்றியையும் பாராட்டையும் தெரிவித்துக் கொள்கிறோம் என்று அந்த சங்க மாநிலத் தலைவர் மு. அமீர்பாட்சா தெரிவித்துள்ளார்.

## தூதர் ஆபீஸ்களில் துப்பாக்கிக்கு "வேட்டு"

புதுடெல்லி, அக். 5— டெல்லியிலுள்ள ஈராக் தூதர் ஆபீஸ்முன் ஈரான் மாணவர்கள் ஆர்ப்பாட்டம் நடத்தினார்கள்.

அவர்களை, நோக்கிஈராக் தூதரக அதிகாரிகள் சிலர் துப்பாக்கியால் சுட்டனர். அந்த அதிகாரிகளை நாட்டை விட்டு வெளியேறுமாறு இந்திய அரசு உத்தர விட்டுள்ளது.

தூதர் அலுவலகங்களில் அனுமதியின்றி துப்பாக்கி வைத்திருக்க தடை விதிப்பது பற்றி அரசு ஆலோசித்து வருகிறது.

## அண்ணா விழாவுக்கு கழகத்தை அழைக்காத புதுவை அரசின் அநீதி

### பி. கே. லோகநாதன் கண்டனம்

பாண்டிச்சேரி, அக். 5— பாண்டிச்சேரி தி.மு.க கூட்டணி அரசு நடத்திய பெரியார்-அண்ணா விழாவிற்கு கழகத்திற்கு அழைப்பு அனுப்பவில்லை. ஆனால் மற்ற கட்சிகளுக்கு அழைப்பு அனுப்பப்பட்டுள்ளது.



தந்தை பெரியார், அண்ணா பிறந்ததின விழாக்களை பாண்டிச்சேரி அரசு இன்று கொண்டாடுகிறது.

இந்த விழாவுக்கு மற்ற கட்சி தலைவர்களுக்கு அழைப்பு அனுப்பப்பட்டுள்ளது. ஆனால புதுவை மாநில அனைத்திந்திய அண்ணா தி.மு.க. செயலாளர் பி. கே. லோகநாதனுக்கு அழைப்பு அனுப்பப்படவில்லை.

புதுவை கூட்டணி அரசின் இந்த பாரபட்சப் போக்கை பி. கே. லோகநாதன் கண்டித்துள்ளார்.

### கருணாநிதி படமா?

அரசு சார்பில் புதுவையில் நடக்கும் இந்த விழாவுக்கு அரசு செலவில் சுவரொட்டியும் போடப்பட்டுள்ளது. அதில் கருணாநிதியின் படத்தையும் அச்சிட்டுள்ளனர்.

பிரதமர் இந்திரா மற்றும் காங்கிரஸ் தலைவர்கள் படத்தைப் புறக்கணித்து விளம்பர அரிப்பர் கருணாநிதியின் படத்தை சுவரொட்டியில் போட்டிருப்பதை இ. காங்கிரஸ்காரர்கள் எப்படித்தான் அனுமதித்தார்களோ தெரியவில்லை என்றும் லோகநாதன் தமது அறிக்கையில் கூறியுள்ளார்.

கொலை செய்யப்பட்ட

## கலியபெருமாள் இறுதி ஊர்வலம்: லோகநாதன் அஞ்சலி

புதுவை, அக். 5- பாண்டிச்சேரியைச் சேர்ந்த கழகத் தோழர் கலிய பெருமாள் நட்ட நடு வீதியில் துரத்தி துரத்தி கொலை செய்யப் பட்டார் அல்லவா?

அவரது உடல் அடக்கம் நடந்தது. இறுதி ஊர்வலத்தில் புதுவை மாநில கழகச் செயலாளர் பி, கே. லோகநாதன் உட்பட ஏராளமான கழகத்தோழர்கள் கலந்து கொண்டனர்.

கலியபெருமாளின் குடும்பத்தினருக்கு லோகநாதன் ஆறுதல் கூறினார்.

## விளம்பர சங்க நிர்வாகிகள் தேர்வு

சென்னை, அக். 5— சென்னை விளம்பர சங்க நிர்வாகிகள் கூட்டம் நடந்தது. 1981.82ம்ஆண்டிற்கு ராமபத்ரன் தலைவராகவும நாகராஜன் துணைத்தலைவராகவும் ராஜகோபால் செயலாளராகவும், வித்யாசாகர் பொருளாளராகவும் மற்றும் கமிட்டி மெம்பர்களாக சீனிவாசன் நிக்கல்நேரு, சுமித் சட்டர்ஜி, பார்த்தசாரதி, ஜெயின் ரவீந்திரன், சந்திரசேகர், ஆகியோரும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

அமைச்சர் கே. ஏ. கே. தகவல்:

## தஞ்சை மாவட்டத்தில் மேலும் 4 கூட்டுறவு தொழில் சங்கங்கள்

தஞ்சை, அக். 5—தஞ்சை மாவட்டத்தில் மேலும் 4 கூட்டுறவு தொழில் சங்கங்கள் அமைக்கப்படும் என அமைச்சர் கே.ஏ.கே. கூறினார்.



தஞ்சை மாவட்டம் சுவாமிமலையில் உள்ள ஒரு தொழில் கூட்டுறவு சங்கத்தைச் சேர்ந்த ஊழியர்களுக்கு போனஸ் மற்றும் டிவிடெண்ட்கள் வழங்கும் விழா நடந்தது.

இந்த விழாவில் கலந்து கொண்டு பேசுகையில் ஊரகத் தொழில்துறை அமைச்சர் கே. ஏ. கே. கூறியதாவது:-

தஞ்சை மாவட்டத்தில் 20 தொழில் கூட்டுறவுச் சங்கங்கள் உள்ளன.

இச்சங்கங்கள் மூலம் ஆண்டுக்கு 62 லட்சம் ரூபாய்க்கு வரவு செலவு நடைபெறுகிறது.

தஞ்சை மாவட்டத்தில் மேலும் 4 தொழில் கூட்டுறவுசங்கங்கள் நிறுவப்படும்.

தஞ்சை மாவட்டத்தில், தேங்காய் ஒடுகள் பெருமளவில் கிடைக்கிறது.

ஆனால் இவற்றில் 40 சதவிகிதம் தான் தொழில் துறைக்குப் பயன்படுத்தப்படுகிறது.

தேங்காய்ஒடுகளைமேலும் அதிக அளவில்பயன்படுத்த முயற்சிக்கவேண்டும்.

இவ்வாறு அமைச்சர் கே.ஏ.கே. கூறினார்.

இந்நிகழ்ச்சிக்கு சட்டமன்ற மேலவை கழகஉறுப்பினரான எஸ்.ஆர். ராதா தலைமை தாங்கினார்.